# BALAVACHAKAM

## SECOND BOOK



TAMIL

VIDWAN
R. MEENAKSHISUNDARAM
*Lecturer in Tamil, St. Joseph's School, Trichinopoly*




APPROVED BY THE TEXT-BOOK COMMITTEE
(*Vide Gazette dated, 10th May 1938, Page 194*)

MADRAS:
C. COOMARASAWMY NAIDU & SONS
1938

Registered]

[Price 3 As.

# பால வாசகம்

## இரண்டாம் வகுப்பு

திருச்சிராப்பள்ளி செய்ன்ட் ஜோஸப்
கலாசாலைத் தமிழாசிரியர்
வித்துவான் - R. மீனாட்சிசுந்தரம்
எழுதியது




துரைத்தனத்தார் அங்கீகரித்தது
[10-5-'38 கெஜட் 194-ஆம் பக்கம் பார்க்க]

சென்னை :
ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்
1938



[விலை 3 அணா

# பொருள் அடக்கம்



# பால வாசகம்

## இரண்டாம் வகுப்பு

---

### 1. எறும்புப் புற்று

ஓர் ஊரில் ஒரு அரசன் இருந்தான். அவனுக்கு ஏழு குமாரர்கள் இருந்தார்கள். அவர்கள் ஒருநாள் வேட்டையாடக் காட்டுக்குச் சென்றார்கள். அவர்களுக்கு வேட்டை ஒன்றும் கிடைக்கவில்லை. ஏழு மீன்கள் அகப்பட்டன.

அவைகளை வீட்டுக்குக் கொண்டுவந்து காயவைத்தார்கள். அவைகளில் ஒரு மீன் காயாமல் இருந்தது. அரசன் அதைக் கண்டான். அரசன் அந்த மீனைப் பார்த்து, "மீனே! நீ ஏன் காயவில்லை?" என்றான்.

**மீன்** — ஆறு, புல்லுகளை அடித்துக் கொண்டு வந்து என்மேல் தள்ளியது; அதனால் நான் காயவில்லை.

**அரசன்** — புல்லே! நீ ஏன் கூட்டமாய் வந்து தேங்கினாய்?

**புல்** — என்னை மாடு மேயவில்லை; அதனால் நான் வந்தேன்.

**அரசன்** — மாடே! நீ ஏன் புல்லை மேய வில்லை?

**மாடு** — இடையன் என்னை மேய்க்கவில்லை.



**அரசன்** — இடையா! நீ ஏன் மாட்டை மேய்க்கவில்லை?

**இடையன்** — அம்மா எனக்குச் சோறு இட வில்லை.

**அரசன்** — அம்மா! நீ ஏன் சோறு இட வில்லை?

**அம்மாள்** — பையன் அழுதான்.

**அரசன்** — பையா ! நீ ஏன் அழுதாய் ?

**பையன்** — என்னை எறும்பு கடித்தது. நான் அழுதேன்.

**அரசன்** — எறும்பே ! நீ ஏன் பையனைக் கடித்தாய் ?

**எறும்பு** — என் புற்றில் கையை வைத்தான். நான் கடித்தேன்.



## 2. "பே பே" செட்டியார்

ஓர் ஊரில் ஒரு செட்டி இருந்தான். அவன் எல்லாரிடத்திலும் கடன் வாங்கி இருந்தான். வியாபாரம் அதிகமாக நடந்தது. பணமும் அதிகமாக வந்தது. அந்தப் பணத்தை எல்லாம் ஓரிடத்தில் மறைத்து வைத்தான். வியாபாரத்தில் நஷ்டம் என்று எல்லாருக்கும் சொன்னான்.

கடன் கொடுத்தவர்கள் எல்லாரும் சும்மா இருப்பார்களா ? எல்லோரும் போய்ப் பணத்தைக் கேட்டார்கள். வியாபாரி ஒன்றுந் தெரியாமல் திகைத்தான்.

அவர்களில் ஒருவன் தனிமையாக வந்தான். வியாபாரியைப் பார்த்து, "உனக்கு ஒரு

உபாயம் சொல்லுகிறேன்; எனது பணத்தைக் கொடுத்து விடுகிருயா?" என்ருன். அதற்கு செட்டி, "இந்தக் கஷ்டம் தீர்ந்து விட்டால் உங்கள் பணத்தைக் கொடுத்துவிடுவேன்" என்ருன்.

உடனே அவன், "யாராவது வந்து பணத்தைக் கேட்டால், 'பே பே' என்று சொல்" என்று கடைக்காரனுக்குப் போதித்தான்.

அந்தச் செட்டி அவன் சொல்லிய படியே பாசாங்கு செய்தான். கடன்காரர்கள் எல்லாரும் அவனுக்குப் பைத்தியம் பிடித்ததென்று எண்ணித் திரும்பிப் போய்விட்டார்கள்.

கடைசியில் யுக்தி சொன்னவன் வந்து, "எனது பணத்தைக் கொடு" என்ருன். செட்டி அவனிடத்திலும், "பே பே" என்ருன்.

கடன்காரன், "என்ன ஐயா! எனக்குமா பே பே!" என்று கேட்டான். செட்டி, "உனக்கும் பே பே, உனது அப்பனுக்கும் பே பே" என்ருன். கடன்காரன் அவமானமடைந்து வீடு சென்ருன்.

**மோசக்காரன் மோசம் போவான்**



# 3. பூனையும் நரியும்

ஒருநாள் மாலையில் ஒரு பூனையும் ஒரு நரியும் ஊருக்கு வெளியில் பேசிக்கொண்டிருந்தன. அப்போது நரி பூனையைப் பார்த்து, "ஓ பூனையே! ஏதாவது அபாயம் வந்தால் தப்பித்துக் கொள்ள உனக்கு உபாயம் தெரியுமா?" என்றது.



பூனை நரியைப் பார்த்து, "மாமா; எனக்கு ஓர் உபாயம் மாத்திரம் தெரியும். எந்தத் துன்பம் வந்தாலும் அந்த உபாயமே எனக்குத் துணை" என்றது.

நரி, பூனையைப் பார்த்து, "உனக்குத் தெரிந்தது ஓர் உபாயந்தான். எனக்கோ கணக்கில்லாத உபாயம் தெரியும். எப்படிப்பட்ட அபாயம் வந்தாலும் நான் தப்பித்துக் கொள்வேன்" என்று கருவத்தோடு பேசியது.

இதற்குள் எங்கிருந்தோ எமனைப்போல வேட்டை நாய்கள் வந்தன. அவைகளைக்

கண்ட பூனை சரேலென்று பக்கத்தில் இருந்த மரத்தில் தாவிக்கொண்டது. நரிக்கோ மரம் ஏறத் தெரியாது. ஆதலால் இங்கும் அங்கும் பார்த்துக்கொண் டிருந்தது. அப்போது வேட்டை நாய்கள் அந்த நரிமேல் பாய்ந்து கடித்துக் கொன்றன.



## 4. உழவுக் கருவிகள்



இது கலப்பையின் படம். இந்தக் கலப்பையால் நிலத்தை உழுவார்கள். நமது தேசத்தில் கலப்பைகள் மரத்தால் செய்யப் படுகின்றன. கலப்பையில் எத்தனை உறுப்புக்கள் இருக்கின்றன பாருங்கள்!

நுகத்தடி, ஏர்க்கால், கொழு, கொழு ஆணி, பிடி முதலியன இருக்கின்றன அல்லவா?

உழும்போது இந்தக் கொழு ஆணி மண்ணைப் பெயர்த்து விடும். சில பூமிகளைத் தண்ணீர் பாய்ச்சி உழுவார்கள். அப்போது இரும்பில்லாத கலப்பையை உபயோகிப்பார்கள்.



இது அரிவாள். விளைந்த பயிரை இந்த அரிவாளால் அரிவார்கள்.

இதன் பெயர் மண்வெட்டி. குடியானவன் மண் வெட்டியால் மண்ணை வெட்டுவான். புல்லைச் செதுக்குவான். நீர் கட்டும்போது மண் வெட்டியால் வெட்டி நீரைக் கட்டுவான். நிலத்தைக் கொத்தவும் இது உபயோகப்படும்.



இது கடப்பாரை. இது இரும்பால் செய்யப்பட்டது. இதனுல் கெட்டி நிலங்களை வெட்டுவார்கள்.



இது களைக் கொட்டு. இதற்கு ஒரு பக்கத்தில் கடப்பாரைப் போல் கூர்மை உண்டு. மற்ருெரு பக்கம் மண்வெட்டி போல அகலமாய் இருக்கும். கூரிய பாகத்தால் நிலத்தை வெட்டுவார்கள். அகலமான பாகத்தால் மண்ணை வாருவார்கள்.



"உழவுத் தொழிலே உயர்ந்த தொழில்"
"சீரைத் தேடின் ஏரைத்தேடு"



## 5. சூரியன்

சூரியன் அதிகாலையில் உதிக்கும். அப்பொழுது அது பொன்னிறமாய் தோன்றும். சிறிது ஒளி வீசிப் பிரகாசிக்கும். அப்பொழுது அது நெருப்புப் பந்துபோல் இருக்கும். சூரியன் மாலையில் மறையும்.

சூரியன் உதயமாகும் திசை கிழக்கு. சூரியன் மறையும் திசை **மேற்கு**. கிழக்கே பார்த்து நின்றால், நமது இடது பக்கம் **வடக்குத்** திசை. நமது வலது பக்கம் **தெற்குத்** திசை. இவ்வாறு கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்ற நான்கு திசைகளையும் சூரியனைக் கொண்டு அறியலாம்.

சூரியன், நாம் வசிக்கும் பூமியை விடப் பெரியது. அது அதிக தூரத்தில் இருக்கிறது. ஆதலால் அது நமது கண்ணுக்குச் சிறியதாய்த் தெரிகிறது.

சூரியன் நமக்கு ஒளியையும் வெப்பத்தையும் தருகிறது. சூரியன் இருந்தால்தான் மழை பொழியும். எப்படி? சூரிய வெப்பத்தால் கடல் நீர் மேகமாகிறது. மேகம் மழை பெய்கிறது. சூரிய வெளிச்சம் இல்லாவிட்டால் மரம், செடி, கொடிகள் வளரா. உயிர்கள் வாழா.

சூரியன் பிரகாசிக்கும் காலம் **பகல்** எனப் படும். சூரியன் பிரகாசிக்காத காலம் இரவு எனப்படும். பகலில் எல்லோரும் வேலை செய் வார்கள். இரவில் யாவரும் தூங்குவார்கள்.

ஒரு பகலும் ஒரு இரவும் சேர்ந்தது ஒரு நாளாகும். ஏழு நாள்கள் சேர்ந்தது ஒரு **வாரம்** ஆகும்.

வாரத்தின் நாட்களுக்கு ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்று பெயர்.

நான்கு வாரங்கள் கொண்டது ஒரு **மாதம்** ஆகும். முப்பது நாள்கள் கொண்டதும் ஒரு மாதமாகும். சில மாதங்கள் முப்பது நாள் களில் குறைந்தும் அதிகமாயு மிருக்கும்.

பன்னிரண்டு மாதங்கள் கொண்டது ஒரு **வருஷம்** ஆகும்.

**பன்னிரண்டு தமிழ் மாதங்கள்**: சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி என்பவையாம். இவற்றை யெல்லாம் சூரியனால்தானே அறிகிறோம்?



# 6. காக்கைகளும் பாம்பும்

ஓர் ஆலமரம் இருந்தது. அதில் இரண்டு காக்கைகள் கூடு கட்டியிருந்தன. அவைகளில் ஒன்று, பெண்காக்கை. மற்றொன்று, ஆண். அந்த மரத்தடியில் பாம்புப்புற்று ஒன்று இருந்தது. அதில் ஒரு பாம்பு இருந்தது.

பெட்டைக் காக்கை முட்டை இடும். இரண்டும் வெளியே சென்றுவிடும். அப்போது அந்தப் பாம்பு அந்த முட்டைகளைத் தின்றுவிடும். இவ்வாறு பலமுறையும் நடந்து வந்தது. பெண் காக்கை தன் முட்டைகளைக் காணுமல் வருந்தும். ஒருநாள் அது ஆண் காக்கையைப் பார்த்து "நாம் இம்மரத்தை விட்டு வேறு இடத்திற்குப் போவோம்" என்றது. அப்பொழுது ஆண் காக்கை "பெண்ணே! நீ அஞ்சாதே. அந்தப் பாம்பைக் கொல்ல ஒரு உபாயம் இருக்கிறது. நான் சொன்னபடி செய்" என்றது. பெண் காக்கை, "என்ன உபாயம்?" என்றது.

"நமது இராச குமாரன் தினமும் இந்த ஏரியில் குளிக்க வருவான். அவன் குளிக்கும் போது கழுத்தில் அணிந்த முத்து மாலையைக் கழற்றி வைப்பான். அதை எடுத்து வந்து இந்தப் புற்றில் போடு" என்றது.

மறுநாள் இராச குமாரன் ஏரியில் குளித்துக்கொண்டிருந்தான். பெண்காக்கை அங்குச் சென்று அந்த முத்து மாலையைக் காலில் பற்றிக்கொண்டுபோய் அப்புற்றில் போட்டது. இராச குமாரன் வீடு சென்று தன் தகப்பனிடத்தில் நடந்ததைச் சொன்னான். உடனே தகப்பனார் வேலையாட்களை அனுப்பி முத்துமாலையைக் கண்டு பிடித்துக் கொண்டு வரச் சொன்னார்.



அவர்களும் கடப்பாரை மண்வெட்டி முதலியவைகளை எடுத்துக் கொண்டு போனார்கள். பாம்புப் புற்றை வெட்டினார்கள். பாம்பு வெளிப்பட்டது. அப்பாம்பை அடித்துக் கொன்றார்கள். முத்துமாலையை எடுத்துச் சென்றார்கள். அது முதல் காகங்கள் சுகமாய் வாழ்ந்து வந்தன.

பிள்ளைகளே! ஆண் காகத்தின் சிறந்த புத்தியைத் தெரிந்து கொண்டீர்களா? புத்திமானே பலவானாவான்.

# 7. குரங்கும் ஆடும்

ஒரு கிராமத்தில் குடியானவன் ஒருவன் இருந்தான். அவன் ஒரு குரங்கையும் ஒரு ஆட்டையும் வளர்த்து வந்தான். அவனுக்கு அவைகளின்மேல் பிரியம் அதிகம். அவன் எங்குப் போனாலும் அவைகளையும் கூட்டிக் கொண்டு போவான்.

அவனுடைய உறவினர் பக்கத்து ஊரில் இருந்தார்கள். அவன் அங்குப் போகவேண்டி இருந்தது.

ஒருநாள் அவன் தயிர்ச் சோறு கட்டிக் கொண்டு புறப்பட்டான். அவைகளும் அவனுடன் போயின. சிறிது தூரம் போனார்கள். வெயில் கடுமையாய் இருந்தது. அதனால் அவனுக்குப் பசி உண்டாயிற்று.

குடியானவன் அங்கிருந்த ஒரு குளக் கரைக்குச் சென்றான். ஆட்டையும் குரங்கையும் ஒரு மரத்தடியில் கட்டினான். சோற்று மூட்டையையும் அவைகளிடம் வைத்தான். குளத்தில் இறங்கி பல் விளக்கிக்கொண் டிருந் தான். அதற்குள் அந்தக் குரங்கு அந்தச் சோற்று மூட்டையை எடுத்தது. அவிழ்த் துச் சோற்றைத் தின்றது. கையில் ஒட்டி யிருந்த தயிரை ஆட்டின் முகத்தில் தடவியது.

பாவம்! குடியானவன் வந்தான். சோற்று மூட்டையைப் பார்த்தான். சோறு எது? ஆட்டின் முகத்தில் தயிரைக் கண்டான். ஆடு தான் சோற்றைத் தின்றுவிட்டது என்று நினைக்கமாட்டானா?



பசியின் கொடுமையால் குடியானவனுக்குக் கோபம் அதிகமாயிற்று. ஆட்டை ஓங்கி ஓங்கி அடித்தான்.

சில துஷ்டர்கள் தவறு செய்துவிட்டுக் குரங்கைப்போல் பிறர்மேல் பழி சுமத்துவார்கள். பிள்ளைகளே! நீங்கள் அவ்வாறு செய்யமாட்டீர்கள் அல்லவா?



# 8. குரங்குகளும் பறவைகளும்

ஒரு மலையில் சில குரங்குகள் வசித்து வந்தன. குளிர்காலம் வந்தது. குளிர் அதிகமாக இருந்தது. குளிர்காலத்தில் நாம் போர்த்துக் கொள்வோம். குரங்குகளுக்குப் போர்வை ஏது? இல்லை அல்லவா? அவைகள் குளிரால் நடுங்கிக்கொண் டிருந்தன.

அப்போது சில மின்மினிப் பூச்சிகள் குரங்குகள் கையில் அகப்பட்டன. குரங்குகள் காய்ந்த விறகுகளை எடுத்து அடுக்கின. அந்த விறகின்மேல் அப்பூச்சிகளை வைத்து நெருப்பு மூட்டின.

மரத்தின் மேல் இருந்த பறவைகள் அதைப் பார்த்தன. "ஏ குரங்குகளே! மின்மினிப் பூச்சிகளால் தீ உண்டாகாது. உங்களுடைய குளிரும் நீங்காது. இது வீண் வேலை" என்றன.

குரங்குகள் அதைக் கேட்கவில்லை. மறுபடியும் நெருப்பு உண்டாக்கத் தொடங்கின. பறவைகள் மறுபடியும் குரங்கைப் பார்த்து, "குரங்குகளே! நீங்கள் செய்வது வீண் வேலை. அதை விட்டுவிடுங்கள்" என்றன.

அந்த மரத்தின்மேல் கிளி ஒன்று இருந்தது. அதற்கும் பறவைகளுக்கும் அதிகச் சிநேகம் உண்டு. அதனால் அந்தக் கிளி,

பறவைகளைப் பார்த்து, "நீங்கள் பேசாதிருங்கள்; குரங்குகளுக்குப் புத்தி சொல்ல வேண்டாம்" என்றது. அந்தப் பறவைகள் கிளி சொன்ன புத்தியைக் கேட்கவில்லை.

பறவைகள் மறுபடியும் குரங்குகளின் பக்கத்தில் போய், "உங்களுக்குச் சொந்தப் புத்தியும் இல்லை. சொன்னாலும் கேட்கமாட்டேன் என்கிறீர்கள் !" என்றன.

அதைக் கேட்ட குரங்குகள் கோபங் கொண்டு அந்தப் பறவைகளைப் பிடித்துக் கொன்று விட்டன.

பிள்ளைகளே ! குரங்குக்குப் புத்தி சொல்லிப் பறவைகள் பட்ட பாட்டைப் பார்த்தீர்களா ? நீங்கள் மூடனுக்கு ஒருநாளும் புத்தி புகட்டாதீர்கள்.



## 9. ஏழைப் பிராமணன்

முன்னொரு காலத்தில் பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் மிகவும் ஏழை. அவனுக்கு ஒரு மனைவி இருந்தாள். பிள்ளை ஒருவனும் இருந்தான். அவர்கள் தழைகளால் சிறிய வீடு ஒன்று கட்டி, அதில் வசித்து வந்தார்கள்.

அவர்கள் தினமும் பக்கத்திலுள்ள காட்டுக்குப் போவார்கள். காய், கனி, கிழங்குகளைப்

பறித்துத் தின்பார்கள். சில சமயங்களில் தானியங்களையும் கொண்டு வருவார்கள்.

சில வருஷங்களாக மழை இல்லை. வெயில் கொடுமையாய் இருந்தது. செடி கொடிகள் எல்லாம் காய்ந்து போயின. அவர்களுக்கு உணவுங் கிடைக்கவில்லை. சிலநாள் பட்டினி இருந்தார்கள். பசி பொறுக்க முடியவில்லை.

அவர்களிடம் இருந்த தானியத்தை எடுத்து மாவாக்கினார்கள். அதைக் கஞ்சியாக்கி யாவரும் குடித்தார்கள். ஒருநாள் அப்படிக் குடிக்கும்போது, யாரோ ஒருவன் வந்தான். அவன் "ஐயா! பசி பொறுக்க முடியவில்லை. காது அடைக்கிறது. கண்கள் இருள் அடைகின்றன. சிறிது உணவு கொடுங்கள்" என்றான்.

அந்தப் பிராமணன் மிகுந்த இரக்கமுடையவன். அவன் தனக்குக் கிடைத்த கஞ்சியை வந்தவனுக்குக் கொடுத்தான். புதிய மனிதன் அக்கஞ்சியைக் குடித்து மறுபடியும் 'பசிக்கின்றது' என்றான்.

அதைப் பார்த்த மனைவி, தனது பாகத்தையும் கொடுத்தாள். அவன் அதையும் குடித்து 'பசிக்கிறது' என்றான். அதைக்கேட்ட மகன் தனது கஞ்சியையும் கொடுத்தான். அவன் அதையும் வாங்கிக் குடித்துவிட்டு ஏப்பம் விட்டான். அவன் அவர்களது தரு

மத்தை மெச்சி அவர்களுக்கு மிகுந்த செல்வம் உண்டாகுமென்று சொல்லி மறைந்து போனான். அவனுக்கு உணவு கொடுத்தவர்கள் வீட்டில் செல்வம் நிரம்பியது. அவர்கள் வறுமை நீங்கி வாழ்ந்தார்கள்.



# 10. இடையன்

ஒரு இடையனுக்குச் சில ஆடுகள் இருந்தன. அவன் அவைகளைத் தினமும் காட்டிற்கு ஓட்டிக்கொண்டு போய் மேய்த்து வருவான். இடையன் ஆடுகளை மேய்த்துக்கொண்டு இருக்கையில் அங்கு ஒரு பாடகன் வந்தான்.

அவன் நல்ல பாட்டுக்கள் பாடுவான். அவன் இடையனிடம் ஏதேனும் பெறலாம் என்று எண்ணினான். உடனே மிக இனிமையாகப் பாட ஆரம்பித்தான்.

அதைக் கண்ட இடையன், அவனைப் பார்த்துத் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான்.

பாடகன், "ஏன் அழுகிறாய்?" என்றான். இடையன், "ஐயா! என்ன சொல்வேன்; நீ தலையை ஆட்டுவது போலவே நேற்று ஒரு ஆடும் தலையை ஆட்டிற்று. சிறிது நேரத்தில் இறந்து போயிற்று. நீயோ நல்ல வயது

உடையவன். நொண்டியு மல்ல; குருடனு மல்ல. ஐயோ பாவம்! நீயும் அப்படி இறந்து போவாய் என்றுதான் அழுகிறேன்" என்ருன்.



அதைக் கேட்ட பாடகன் வெட்கம் அடைந்து, "பாட்டின் அருமை தெரியாத இந்த மடையனிடம் பாடினேமே" என்று எண்ணிக்கொண்டே போனுன்.



# 11. வேப்பமரமும் கோரைப்புல்லும்

ஓர் ஆற்றங் கரையில் ஒரு வேப்பமரம் இருந்தது. அதனருகில் கோரைப்புல் வளர்ந்திருந்தது. ஒரு நாள் காற்று அதிகமாக வீசிற்று. கோரைப்புல் காற்றுக்குப் பொறுக்காமல் வளைந்தது. வேம்பு அதைப் பார்த்து, "ஏ கோரையே! நீ சிறிய காற்றுக்கு வளைந்தாயே, பெருங் காற்றுக்கு என்ன செய்வாய்?" என்று கேட்டது. அதற்குக் கோரை ஒன்றுஞ் சொல்லாது பேசாதிருந்தது.

மற்றொரு சமயம் பெரிய காற்று வீசிற்று. வேம்பு அந்தக் காற்றுக்குப் பொறுக்காமல் படீர் என்று முறிந்து கீழே விழுந்தது. கோரை இந்தக் காற்றுக்கு வளைந்திருந்தது.

பிறகு காற்று நின்றது. கோரையும் தலை நிமிர்ந்தது.

வேம்பு கோரையைப் பார்த்து, "பெரிய மரமாகிய நானே முறிந்து விட்டேன்; நீ எப்படி நின்றாய்?" என்றது.

அதற்குக் கோரை, "ஐயா! காற்றினுடைய பலம் எவ்வளவு! நமது பலம் எவ்வளவு? நாம் எவ்வளவு பலமாயிருந்தாலும்

காற்றை எதிர்த்து நிற்க முடியுமா? நாம் எதிர்த்து நிற்பதும் அறிவீனம். காற்று பலமாய் வீசியபோது ,நான் தலைசாய்ந்து நின்றேன். காற்றினது :வேகமும் நின்றது. நானும் தலைநிமிர்ந்தேன்" என்றது.

ஆதலால் பிள்ளைகளே! நீங்கள் எப்பொழுதும் பணிவாய் இருங்கள். யாவரும் உங்களை நேசிப்பார்கள்.



## 12. காக்கையும் குருவியும்

ஒரு காக்கையும் குருவியும் அதிக நேசமாய் இருந்தன. காக்கை வேப்பமரம் ஒன்றில் கூடுகட்டி இருந்தது. குருவி வீட்டுத் தாழ்வாரத்தில் கூண்டுகட்டி இருந்தது.

ஒருநாள் பெரிய காற்று வீசிற்று. அப்பொழுது காக்கையின் கூடு கீழே விழுந்து விட்டது. காக்கைக்குக் குளிர் பொறுக்க முடியவில்லை. அதனால் அது குருவிக் கூண்டின் பக்கத்தில் சென்று, "குருவி! குருவி! கதவைத் திற" என்றது.

குருவி — (வீட்டினுள் இருந்து கொண்டே)
நான் சுவாமியைத் தொழுகிறேன்.

காக்கை — குருவி! குருவி! கதவைத் திற.

குருவி — நான் முகம் கழுவுகிறேன்.



காக்கை — குருவி! குருவி! கதவைத் திற.

குருவி — நான் தண்ணீர் தெளிக்கிறேன்.

காக்கை — குருவி! குருவி! கதவைத் திற.

குருவி — நான் தண்ணீரில் குளிக்கிறேன்.

**காக்கை** — குருவி! குருவி! கதவைத் திற.

**குருவி** — நான் உலை வைக்கிறேன்.

**காக்கை** — குருவி! குருவி! கதவைத் திற.

**குருவி** — நான் சோறு வடிக்கிறேன்.

**காக்கை** — குருவி! குருவி! கதவைத் திற.

**குருவி** — நான் குழம்பு வைக்கிறேன்.

**காக்கை** — குருவி! குருவி! கதவைத் திற.

**குருவி** — நான் தயிர் கடைகிறேன்.

**காக்கை** — குருவி! குருவி! கதவைத் திற.

**குருவி** — புருஷனுக்குச் சோறு போடுகிறேன்.

**காக்கை** — குருவி! குருவி! கதவைத் திற.

**குருவி** — பிள்ளைக்குப் பால் கொடுக்கிறேன்.

**காக்கை** — குருவி! குருவி! கதவைத் திற.

**குருவி** — பிள்ளைக்குத் தாலாட்டுகிறேன்.

**காக்கை** — குருவி! குருவி! கதவைத் திற.

குருவி "நான் சாப்பிட்டுக்கொண்டு இருந்தேன்" என்று சொல்லிக்கொண்டே வந்து கதவைத் திறந்தது.



# 13. ஒரு பிரபு

ஒரு கிராமத்தில் பிரபு ஒருவர் இருந்தார். அவர் ஒருநாள் வேலைக்காரனை அனுப்பிப் புரோகிதரை அழைத்துவரச் சொன்னார். புரோகிதர் தாமதமாய் வந்தார். பிரபு அவரைப் பார்த்து, "ஏன் இவ்வளவு நேரம்?" என்று கேட்டார்.

**புரோகிதர்** — உடுத்துக்கொள்ளத் துணி இல்லை. சேணியன் துணி நெய்ய வில்லை.

**பிரபு** — (சேணியனைக் கூப்பிட்டு) ஏன் துணி நெய்யவில்லை?

**சேணியன்** — நெய்யும் இயந்திரம் கெட்டு விட்டது. தச்சன் பழுது பார்க்கவில்லை.

**பிரபு** — (தச்சனை அழைத்து) ஏன் பழுது பார்க்கவில்லை.

**தச்சன்** — உளியின் முனை மழுங்கிவிட்டது. சாணைபிடிப்பவன் வரவில்லை.

**பிரபு** — (சாணை பிடிப்பவனைக் கூப்பிட்டு) ஏன் சாணைபிடிக்கவில்லை?

**சாணை பிடிப்பவன்** — எண்ணெய் இல்லை. வாணியன் எண்ணெய் தரவில்லை.

**பிரபு** — (வாணியனை அழைத்து) ஏன் எண்ணெய் தரவில்லை?

**வாணியன்** — சுவாமி! என் மனைவி நோயாளி. வைத்தியர் அவளுக்கு மருந்து கொடுக்கவில்லை?

**பிரபு** — (வைத்தியனை அழைத்து) ஏன் மருந்து தரவில்லை?

**வைத்தியன்** — ஐயா! இன்று அமாவாசை, சனிவாரம், கிருத்திகை, ஆதலால் மருந்து கொடுக்கவில்லை.



# 14. தும்பி

ஒரு நாள் மாலையில் இராமன் முனியனைப் பார்த்தான். இராமன் தன் கையை மூடிக் கொண்டு, "முனியா! என் கையில் என்ன இருக்கிறது? சொல்" என்றான்.

**முனியன்** — மிட்டாய்.

**இராமன்** — இல்லை.

**முனியன்** — காசு.

**இராமன்** — இல்லை. உன்னால் சொல்ல முடியாது (என்று, தனது கையைச் சிறிது திறந்து காட்டி) இப்போது சொல்.

முனியன் — இதென்ன 'கொய்' என்ற சத்தம் கேட்கிறதே! ஈயா ?

இராமன் — ஈ யல்ல, தும்பி.

முனியன் — ஏன் அதைக் கொல்கிறாய் ? ஐயோ! பாவம்! அதை விட்டுவிடு.



இராமன் — தும்பி சிறிய பிராணிதானே, அதற்குக் கஷ்டம் ஏது ?

முனியன் — சிறிய பிராணிக்கு வருத்தம் இல்லையா ? சிறிய எறும்புக்கும் வருத்தம் உண்டு.

**இராமன்** — இதோ பார்! இதன் வாலில் கயிறு கட்டியிருக்கிறேன்.

**முனியன்** — ஐயோ! என்னபாவம்! முதலில் அந்தக் கயிற்றை அவிழ்த்துவிடு. அத் தும்பியை உயிருடன் விட்டுவிடு. அப்புறம் உனக்குச் சொல்லுகிறேன்.

(இராமன், அக் கயிற்றை அவிழ்த்துத் தும்பியை விட்டுவிட்டான்.)

**முனியன்** — உன் காலில் விலங்கிட்டுச் சிறையில் அடைத்தால் நீ என்ன செய்வாய்?

**இராமன்** — அழுவேன்.

**முனியன்** — உன்னைப் போலவே எல்லாப் பிராணிகளும் வருந்தும் என்று நினை. பிராணிகளுக்கெல்லாம் நம்மைப் போலவே சுகமுண்டு, துக்கமுண்டு, பசியுண்டு, பயமுண்டு.

**இராமன்** — தும்பிக்கு உயிருண்டா?

**முனியன்** — உயிருண்டு. உயிரில்லாவிட்டால், அது பறக்குமா? சத்தமிடுமா? தும்பிக்கும் உயிருண்டு. செடி, கொடிகளுக்கும் உயிருண்டு.

**இராமன்** — இவை எல்லாம் உனக்கு எப்படித் தெரியும்?

**முனியன்** — ஒரு நாள் என் தங்கை ஓர் எறும்பை மிதித்தாள். அப்போது என் தகப்பனார் சொன்னார்.

**இராமன்** — என்ன சொன்னார்?

**முனியன்** — "பிள்ளைகளே! நீங்கள் அடிபட்டால் வருந்துவீர்கள். அதுபோலவே எல்லா உயிரும் வருந்தும். அதனால் எந்த உயிருக்கும் தீங்கு செய்யாதீர்கள். எல்லா உயிரினிடத்தும் அன்பாயிருங்கள்" என்று புத்தி சொன்னார்

**இராமன்** — முனியா! நான் தெரியாமல் குற்றம் செய்து விட்டேன். மன்னித்துக்கொள். இனி எப்போதும் தவறு செய்யேன்.

**முனியன்** — நல்லது. அம்மாதிரியே நட, அது எனக்குச் சந்தோஷம். பொழுது போயிற்று. நாம் வீடு செல்வோம்.



## 15. அங்குஷ்டன்

ஓர் ஊரில் ஏழைக் குடியானவன் ஒருவன் இருந்தான். அவனுக்கு நெடுநாளாகப் பிள்ளை இல்லை. அதனால் அவனும் அவன் மனைவியும் மிகுதியும் வருத்தமா யிருந்தார்கள்.

சில ஆண்டுகளுக்குப் பின் அவளுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அப்பிள்ளை தாயாரின் பெருவிரல் பருமன் இருந்தான். அதனால் அவனுக்கு அங்குஷ்டன் என்று பெயர்



இட்டார்கள். அவனை அன்புடன் வளர்த்து வந்தார்கள். அவன் எப்போதும் தன் தாயின் உள்ளங்கையில் விளையாடிக் கொண்டு இருந்தான்.

ஒருநாள் பூனை ஒன்று அவனை எடுத்துச் சென்றது. மற்றொரு நாள் ஒரு காக்கை

அவனைத் தூக்கிச் சென்று ஒரு குளத்தில் போட்டு விட்டது. அங்கிருந்த ஒரு மீன் அவனை எடுத்து விழுங்கிவிட்டது. மீன் பிடிப்பவர்கள் அந்த மீனைப் பிடித்து, அவ்



வூர் அரசனிடம் கொண்டுபோய் விற்று விட்டார்கள். அரண்மனையில் அந்த மீனை அறுத்தபோது அங்குஷ்டன் அதிலிருந்து வெளி வந்தான்.

அரசன் அவனைக் கண்டதும் அதிக ஆச் சரியங் கொண்டான். அவன்மேல் அன்பு

கொண்டு அவனுக்குச் சிறிய உடுப்புக்கள் தைத்துக் கொடுத்தான். இரவில் அவனை எலிகள் பிடித்துக்கொள்ளாதபடி கிளிக் கூண் டில் விட்டுவைப்பான்.

சிலநாள் ஆனவுடன் அங்குஷ்டன் தாய் தந்தையர்களைப் பார்க்க ஆசை கொண்டான். அரசனும் அவனுக்கு உத்தரவு தந்தான்.

அங்குஷ்டன் தன் வீட்டுக்குப் போனான். காக்கை எடுத்துப் போன பிள்ளையைக் கண் டதும் பெற்றோர்கள் மனமகிழ்ச்சி அடைந் தார்கள். அவர்கள் சந்தோஷத்தைச் சொல் லவும் வேண்டுமோ ?



## 16. வௌவால்

முன்னொரு காலத்தில் பறவைகளும் மிரு கங்களும் சண்டையிட்டுக் கொண்டன. அச் சமயத்தில் எப்படி முடியுமோ என்று நான் எண்ணினேன். ஆதலால் ஒரு பக்கத்திலும் சேராமலிருந்தேன்.

ஒரு சமயத்தில் மிருகங்களுக்கு வெற்றி யுண்டாகுமென்று தெரிந்தது. உடனே நான் அவைகளிடம் போய், “சகோதரர்களே ! உங் களைப் போலவே எனக்கும் வாயில் பற்கள்

இருக்கின்றன. ஆதலால் நானும் உங்களைச் சேர்ந்தவனே" என்றேன். பிறகு அந்த மிருகங்களுடன் சேர்ந்துகொண்டேன்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவ்விரண்டுக்கும் கொடிய சண்டை நடந்தது. அதில் பறவைகளுக்கு வெற்றி யுண்டாகும்போல் தோன்றியது.



உடனே நான் பறவைகளிடம் சென்று "சகோதரர்களே! நான் உங்கள் சகோதரன், நான் மிருகமானல் எனக்குச் சிறகு இருக்காதல்லவா?" என்று அவைகளோடு உறவாடப் போனேன்.

பறவைகள், "நீ எங்களோடு சேரத் தக்கவன் அல்ல. உனக்கு மிருகங்களைப்போல் பற்க

ஞண்டு, போ போ" என்று என்னைக் கொத்தித் துரத்திவிட்டன.

நான் மறுபடியும் மிருகங்களிடம் போனால் ஆபத்து உண்டாகும். ஆதலால் அதிலிருந்து நான் எனது முகத்தை யாருக்கும் காட்டுவதில்லை. இரவில் மாத்திரம் வெளியில் திரிவேன் அப்போதுதான் நீ என்னைப் பார்ப்பாய். என் பெயர் உனக்குத் தெரியுமா? வௌவால்.

## 17. எருதும் தவளையும்

ஓர் ஏரியில் கணக்கில்லாத தவளைகள் இருந்தன. அந்தத் தவளைகள் பெரியதும், சிறியதுமாய் இருந்தன. இவைகளுக்கு ஒரு ராஜ தவளை இருந்தது.

ஒருநாள் சிறிய தவளைகளெல்லாம் கரையில் வந்து கத்தி விளையாடின. அச்சமயத்தில் ஒரு எருது தண்ணீர் குடிக்க ஏரிக்கு வந்தது. அந்த எருதின் காலடியில் பட்டுச் சில தவளைகள் இறந்தன. மற்றத் தவளைகள் ராஜ தவளையிடம்போய், "ஒரு பெரிய பிராணி வந்தது. அதன் காலடி பட்டுச் சில தவளைகள் இறந்தன. அந்தப் பிராணியை நாங்கள் எப்பொழுதும் பார்த்ததில்லை" என்று சொல்லின.

அதைக் கேட்டதும், ராஜ தவளை, தன் வயிற்றைப் பெரிதாய்க் காட்டி, "இவ்வளவு பெரிதாய் இருக்குமா?" என்றது. அதற்கு அவைகள், "இதற்கும் பெரிதாய் இருந்தது" என்றன.



ராஜதவளை அதைவிட வயிற்றைப் பெரிதாகக் காட்டி, "இவ்வளவு இருக்குமா?" என்றது. தவளைகள், "தாங்கள் எவ்வளவு பெரிதானாலும் அதன் கால்குளம்பு அளவுகூட இராது" என்றன. மறுபடியும் ராஜதவளை தன் வயிற்றைப் பெரிதாக்கிக் கொண்டு, "இவ்வளவு இருக்குமா?" என்றது. அதற்கு அவைகள்

"தாங்கள் எவ்வளவு பெரிதானாலும் அந்த எருதுக்கு ஈடாக மாட்டீர்கள்" என்றன.

அதைக் கேட்டதும் இராஜ தவளைக்கு மிகுந்த கோபமுண்டாயிற்று. உடனே ராஜ தவளை தன் மூச்சையெல்லாம் அடக்கிக்கொண்டு பெரிதாகியது. இப்படிக் கோபத்தால் உப்பின வுடனே வயிறு வெடித்து இறந்துபோயிற்று.



## 18. இராஜன் இராஜனே

முன்னொரு காலத்தில் அரசன் ஒருவன் இருந்தான். ஒரு நாள் ஒரு முனிவர் அவ் வரசனிடம் வந்தார்.

அரசன் எழுந்து அம் முனிவரைப் பணிந்தான். முனிவரும் அரசனை வாழ்த்தினார். அரசன் முனிவரைப் பார்த்து, "சுவாமி! எல்லாப் பிராணிகளினது பேச்சுகளையும் தெரிந்துகொள்ளும்படியாக ஒரு வரம் தர வேண்டும்" என்று கேட்டான். முனிவர் அரசன் விரும்பிய வரத்தைக் கொடுத்தார். பிறகு போய்விட்டார்.

அந்த அரசனுடைய மனைவி அதிக அழகுடையவள். அரசனுக்கு அவளிடத்தில் அதிக அன்புண்டு. ஆதலால் அரசனும் அவள் சொற்படியே நடந்துவந்தான்.

ஒருநாள் அரசன் கட்டிலின்மேல் உட்கார்ந்திருந்தான். அப்பொழுது இராணியும் அவனருகே இருந்து வீணைவாசித்துக்கொண்டிருந்தாள்.

அச் சமயத்தில் அரசன் திடீரென்று சிரித்தான். அதைக் கண்ட அரசி, அரசன் தன்னைப் பார்த்துச் சிரித்ததாக எண்ணி வருந்தி, அரசனைப் பார்த்து, "ஏன் சிரித்தீர்கள்?" என்றாள். அரசன் "பெண்ணே! இதோ இந்த எறும்புகளைப் பார். இந்த எறும்புகள் சண்டைக்குப் போகின்றன. இந்த எறும்பு ராஜா, இந்த எறும்பு மந்திரி, இவைகளெல்லாம் வேலையாட்கள். இவைகள் போகும்போது நமது கட்டிலின் கால் குறுக்கிட்டது.

"அதைக் கண்ட முன்னே சென்ற எறும்புகள் அரசனுக்கு அறிவித்தன. அதைக் கேட்ட ராஜா எறும்பு 'அத் தூணை எடுத்துவிடுங்கள். உங்களால் முடியவில்லை என்றால் எல்லோரையும் சேர்த்துக் கொள்ளுங்கள்' என்றது.

"இப்படியாக ராஜா எறும்புசொன்னதைக் கேட்டேன். எந்தப் பிராணிகளிலும் அரசன் அரசன்தான் என்று எண்ணினேன். அதனால் சிரித்தேன்" என்றான். அதைக்கேட்ட இராணி மிகவும் வெட்கமடைந்தாள்.



## 19. வயிறும் அவயவங்களும்

ஒருதரம் கைகால் முதலிய அவயவங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து வயிற்றோடு சண்டை செய்யத் தொடங்கின.

"நாம் எல்லோரும் வருந்தி உழைத்து உணவு தேடுகிறோம். இந்த வயிறு வேலை செய்வதே இல்லை. நாம் தேடிக் கொண்டு வரும் உணவுகளை எல்லாம் தின்று விடுகிறது. நாம் கஷ்டப்படுகிறோம். வயிறோ சாப்பிட்டு விட்டுப் பேசாமல் இருக்கிறது. இது நியாயமாகுமா? இனி நாம் வேலை செய்யவே கூடாது. அப்பொழுதுதான் இந்த வயிறு ஒடுங்கும்" என்று உறுப்புக்கள் எல்லாம் பேசிக் கொண்டன.

இப்படியாக எல்லா உறுப்புக்களும் ஒன்றும் செய்யாது இருந்துவிட்டன. வயிறு என்ன செய்யும்? அதுவும் பேசாதிருந்தது.

இவ்வாறு சில நாட்கள் சென்றன. கைகள் எல்லாம் சோர்ந்து கீரைத்தண்டு போலாயின. கண்கள் மழுங்கின; காது கேட்கவில்லை; நாவுலர்ந்து போனது; உடம்பு மெலிந்து பாதியாயிற்று. இதைப் பார்த்த அறிவு, உறுப்புக்களைப் பார்த்து, "நீங்கள், வயிறு ஒன்றும் செய்வதில்லை என்றீர்கள், அது தவறு.

"நீங்கள் எல்லோரும் உழைப்பது போலவே வயிறும் உழைக்கின்றது. எப்படியெனில், நீங்கள் கொண்டுவரும் உணவை வயிறு உட்கொண்டு அதை இரத்தமாக மாற்றுகிறது. அந்த இரத்தம் உடல் முழுவதும் பரவுகிறது. உங்களுக்குப் பலத்தைத் தருகிறது. பலமில்லாது நீங்கள் வேலைசெய்வீர்களா ? இப்பொழுது இருந்ததுபோலவேதான் அசைய முடியாது இருப்பீர்கள். ஆதலால், நீங்கள் பிணக்கத்தை விட்டு வேலை செய்யுங்கள்" என்றது. அதைக் கேட்ட உறுப்புக்கள் தங்கள் தங்கள் வேலையைச் செய்யத் தொடங்கின.



## 20. தென்னாலிராமன்

நெடுங்காலத்திற்கு முன் ஒரு கிராமத்தில் ஒருசிறுவன் இருந்தான். அவன் பெயர் இராமன். அவன் மிகவும் துஷ்டன். பள்ளிக்கூடத்திற்கு ஒழுங்காகப் போகமாட்டான். பாடங்களைச் செவ்வையாகப் படிக்கமாட்டான். எப்பொழுதும் குற்றங்களையே செய்வான். ஆனாலும் அவனுக்குக் காளியிடத்தில் பக்தி அதிகம்.

இராமன் நெடுங்காலமாகத் தேவியை தியானித்து வந்தான். தேவி அவனது அன்புக்கு வியந்து, ஒரு நாள் அவனுக்கு முன்

தோன்றி, "அப்பா! உனக்கு வேண்டியதைக் கேள்" என்ருள். அவன் வரங் கேட்காது அந்த தேவியைப் பார்த்துச் சிரித்தான்.

தேவி, அவனைப் பார்த்து "என்னடா சிரிக்கிருய்?" என்ருள்.

அதற்கு இராமன் "தேவி! எனக்கு மூக்கு ஒன்று. எனக்குச் சளி பிடித்துக் கொண்டால் பெருங் கஷ்டமா யிருக்கிறது. உனக்கோ, ஆயிரம் முகங்கள், ஆயிரம் மூக்குகள் இருக்கின்றனவே, உனக்குச் சளி பிடித்தால் எவ்வளவு கஷ்டப்படுவாயோ என்று எண்ணினேன், சிரிப்புவந்தது" என்ருன். அப்போது தேவி, "அடா! நீ விகடகவியாக இரு" என்ருள்.

இராமன் தேவியை வணங்கி, "அம்மா! எனக்கு நல்ல வரம் தந்தாய்! நீ சொன்ன அவ் வார்த்தையைத் திருப்பிச் சொல். விகடகவி அல்லவா! அதனுல் நான் என்ன சொன்னுலும் அதுஉண்மையாகும் என்று வரம்கொடுத்தாய்" என்ருன்.

தேவி, அவனது அறிவுக்கு மெச்சி "அப்படியே ஆகும்" என்று சொல்லி மறைந்து போனுள்.

அன்று முதல் இராமன் சிறந்த கவியானுன். பேரும் புகழும் பெற்று வாழ்ந்திருந்தான்.

# 21. குணவதி

மதுரையில் ஒரு செல்வன் இருந்தான். அவனுக்குக் குணவதி என்று ஒரு பெண் இருந்தாள். அவர்களது வீடு மெத்தை வீடு. மெத்தையில் ஒரு கண்ணாடி இருந்தது.



குணவதி ஒரு நாள் மெத்தைக்குச் சென்றாள். அவளது நிழல் அந்தக் கண்ணாடியில் தெரிந்தது. அப்பொழுது அவளுக்கு வயது ஆறு இருக்கும். அந்த நிழலை வேறொரு பெண்ணாக நினைத்தாள்.

உடனே அவளுக்குக் கோப முண்டாயிற்று. அவள் அந்த நிழலைப் பார்த்து, "நீ

ஏன் இங்கு வந்தாய்? இறங்கிச் செல்'' என்று கையை நீட்டிக் காட்டினாள்.

அந்த நிழலும் அவள் காட்டினது போலவே காணப்பட்டது. குணவதி அதைக் கண்டு கேலி செய்தாள். அந்த வடிவமும் அப்படியே கேலி செய்தது. குணவதி அவளை அடிக்கக் கையை ஓங்கினாள். அந்த நிழலும் அப்படியே கையை ஓங்கியது. குணவதி கோபத்துடனே தனது தாயிடம் சென்றாள்.

"அம்மா! நமது மெத்தைக்கு ஒரு திருட்டுப் பெண் வந்திருக்கிறாள். அவளை 'ஏன் வந்தாய்?' என்றேன். அவள் கோபத்துடனே அடிக்க வருகிறாள்'' என்றாள்.

அதைக் கேட்ட தாய், அவளை அருகில் அழைத்து அணைத்து, "என் கண்ணே! அவள் மிகவும் நல்லவள். அவளை நீ கேலி செய்தாயா? அடிக்கச் சென்றாயா? திரும்பிச் சென்றால் அப்படிச் செய்யாதே. 'அம்மா! விளையாடுவோம் வா' என்றழை; சந்தோஷமாய்ப் பேசு. அவளும் விளையாட வருவாள்; சந்தோஷமாக பேசுவாள்'' என்றாள்.

குணவதி மறுபடியும் மெத்தைக்குச் சென்று, கண்ணாடியில் நிழலைக் கண்டாள். சிரித்துக்கொண்டே "விளையாடுவோம் வா'' என்றாள். அந்த நிழலும் அப்படியே

அழைத்தது. அப்போது குணவதிக்கு எவ்வளவு சந்தோஷம் உண்டாயிருக்கும்!

குணவதி மறுபடியும் தனது தாயன்டைசென்ருள். "அம்மா! மெத்தைக்குப் போனேன். அங்கிருப்பவள் நல்லவள். நான் 'வா' என்றேன். அவளும் என்னை 'வா' என்ருள். என்னைப் போலவே இருக்கிருள். அவளை இங்கே இருக்கச் செய்" என்ருள்.

அப்போது தாயார், "குழந்தாய்! நீ கண்டது உனது நிழலே. வேறு பெண்ணன்று. முதலில் நீ அவளைக் கோபித்தாய். அதனுல் அவளும் கோபித்தது போலக் கண்டாய். மறுபடி நீ நேசித்தாய். அவளும் நேசிப்பது போலத் தோன்றியது. நீ மற்றவர் எப்படி இருக்க விரும்புகின்ருயோ, அப்படியே நீயும் அவர்களிடத்தில் நடந்துகொள். எப்போதும் இதை மறவாதே. நீ இவ்வுலகில் இனிது வாழ்வாய்" என்ருள்.



## 22. மூன்று கரடிகள்

ஒரு காட்டில் ஒரு பெரிய வீடு இருந்தது. அந்த வீட்டில் மூன்று கரடிகள் இருந்தன. அவைகளில் ஒன்று ஆண்கரடி, மற்ருென்று பெண்கரடி, இன்னொன்று குட்டிக் கரடி.

அந்த மூன்று கரடிகளுக்கும் மூன்று அறைகள் இருந்தன. பெண்கரடியின் அறை பெரியது. ஆண்கரடியின் அறை சிறியது. குட்டியின் அறை மிகவுஞ் சிறியது.

அந்த மூன்று கரடிகளுக்கும் மூன்று கட்டில்கள் உண்டு. பெண் கரடியின் கட்டில் உயரமானது. ஆணின் கட்டில் சிறிது உயரம். குட்டியின் கட்டில் சிறியது.



அந்த மூன்றும் மூன்று கிண்ணிகளில் உண்ணும். பெண்ணுக் குரியது செம்பாலானது, ஆணுக்குரியது பித்தளை. குட்டிக் குரியது வெள்ளியினு லாகியது.

அம் மூன்றும் பண்டிகை நாட்களில் பாயஸம் வைக்கும். அவைகள் ஒரு நாள் பாயஸம் வைத்து, அதைக் கோப்பையில் வார்த்

துக் கொண்டு கோயிலுக்குப் போயின. அப்பொழுது ஒரு குழந்தை அக் கரடிகளின் வீட்டுக்கு வந்தது. அது ஒரு துஷ்டப்பெண். மெல்லக் கதவைத் திறந்து உள்ளே சென்றது.



கிண்ணிகளில் பாயஸத்தைக் கண்டது. பெண்கரடியின் கிண்ணி அதிக சூடாயிருந்தது. ஆண்கரடியின் கிண்ணி சிறிது சூடாயிருந்தது. குட்டியின் கிண்ணியில் இருந்த பாயஸம் ஆறி யிருந்தது. அதை அப் பெண் குடித்துவிட்டது.

பிறகு அந்தப் பெண் ஒவ்வொரு கட்டிலின்மேலும் ஏறிக் குட்டியின் கட்டிலில்படுத்து உறங்கிவிட்டது.

சிறிது நேரத்தில் கரடிகள் வீட்டுக்கு வந்தன. குட்டிக்கரடி, தனது கிண்ணத்திலிருந்த பாயஸத்தைக் காணவில்லை. அதனால் அது கத்தியது. அதைக்கேட்ட இரண்டு கரடிகளும் கோபத்துடன் சென்று கட்டில்களைப் பார்க்க ஒரு பெண் சிறிய கட்டிலில் படுத்துறங்குவதைக் கண்டன. கரடிகளும் ஆச்சரியத்துடன் கூச்சலிட்டன. அதைக் கேட்ட பெண் விழித்துக்கொண்டது. அது கரடிகளைக் கண்டதும் ஓட்ட மெடுத்தது.



## 23. கண்ணனது லீலைகள்

ஒருநாள் யசோதை, வீட்டில் முக்காலியில் வீற்றிருந்தாள். அப்போது கண்ணன் அவளது பக்கத்தில் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

**யசோதை** — கிருஷ்ணா ! கேட்டாயா ! நமது வீட்டில் பால் வெண்ணெய் இல்லையா ? ஆடையில்லையா ? கோபிகள் வீட்டுக்குப் போய்த் திருடலாமா ?

**கிருஷ்ணன்** — அம்மா ! நான் இங்கேதான் இருந்தேன். எங்குச் சென்றேன் ? என்ன திருடினேன் ?

**யசோதை** — கிருஷ்ணா! கௌதமி வீட்டில் பாலைத் திருடினாயாம். உறியில் இருந்த பாற்சட்டியை உரல்மேல் ஏறி எடுக்கச் சென்றாயாம்.

**கிருஷ்ணன்** — அம்மா! அவை யெல்லாம் வீண் வார்த்தை. நான் உரலை உருட்டவே இல்லை.



**யசோதை** — கிருஷ்ணா! நீ சாமங்கி வீட்டுக்குப்போய் அவள் கன்றை அவிழ்த்து விட்டாயாம். இப்படிப்பட்ட செயல்களைச் செய்யாதே.

**கிருஷ்ணன்** — அம்மா, நான் அண்ணனேடு அல்லவா விளையாடிக்கொண்டிருந்தேன். அவர்கள் வீட்டுக்குப் போகவேயில்லை. அண்ணனைக் கேள்.

**பலராமன்** — (பெருமூச்சுடனே ஓடி வந்து) அம்மா ! தம்பி எங்கே ?

**யசோதை** — அப்பா ! இதோ தம்பி இருக்கிருன். நீ ஏன் அதி வேகமாக ஓடிவந்தாய்?

**பலராமன்** — அம்மா ! தம்பி மண்ணைத் தின்ருன்.

**யசோதை** — எப்போது தின்ருன் ? இங்குத் தானே இருக்கிருன்.

**பலராமன்** — அம்மா! இப்போதுதான் தின்ருன். சொல்லாதே என்று என்னைக் கேட்டுக்கொண்டான். இதற்குள் எப்படி இங்கு வந்தான் ? மண்ணை அதிகம் தின்ருன். விதைகளையும் தின்ருன். வயிற்றில் மரம் செடிகளும் முளைக்கும்.

**யசோதை** — கிருஷ்ணு ! மண் தின்ருயா ?

**கிருஷ்ணன்** — மண்ணைத் தின்ன நான் என்ன சிறு பிள்ளையா ? பைத்தியமா ? எல்லா ஆட்டங்களையும் நானே வென்றேன். அதனுல் அண்ணனுக்குக் கோபம். நீ

என்னை அடிக்கவேண்டுமென்று இப்படிச் சொல்லுகிருன். என் வாயை முகர்ந்து பார்; மண் வாசனை வீசுகிறதா? (என்று வாயைத் திறந்து காட்டினுன்.)

யசோதை கிருஷ்ணனது வாயைப் பார்த்தாள்; அதிசயங்கொண்டாள். "என்ன ஆச்சரியம்! சிறிய கிருஷ்ணன் வாயில் உலகமெல்லாம் தெரிகிறதே! கடவுள் என்னிடம் சிறு பிள்ளையாகத் தோன்றி எனக்குச் சந்தோஷத்தைக் கொடுத்துக்கொண் டிருக்கிருர்" என்று கடவுளைத் துதித்தாள்.



## 24. பாரதம்

இந்து தேசத்தின் வடபாகத்தில் டில்லிப் பட்டணம் என்றொரு நகரம் உண்டு. முன் காலத்தில் அப் பட்டணத்திற்கு அஸ்தினு புரம் என்று பெயர். நெடுங்காலத்திற்கு முன் இந் நகரத்தைப் பரதன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவனது குலத்தில் பிறந்த வீரர்கள் பாரதர். அவர்களது சரிதம் பாரதம் எனப் படும்.

ஒரு சமயத்தில் அஸ்தினுபுரத்தில் திருதராஷ்டிரன், பாண்டு என்று இரண்டு இராஜ குமாரர்கள் இருந்தார்கள். மூத்தவனுன திருத

ராஷ்டிரான் குருடன். ஆனதால் தம்பி பாண்டு அரசாண்டு வந்தான்.

மூத்தவனுக்கு நூறு பிள்ளைகள். அவர்களுக்குக் கௌரவர் என்று பெயர். தம்பியாகிய பாண்டுராசனுக்குப் பிள்ளைகள் ஐவர். அவர்களுக்குத் தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகதேவன் என்று பெயர். இந்த ஐந்து பேர்களுக்கும் பாண்டவர்கள் என்று பெயர்.

பிள்ளைகள் சிறுவர்களா யிருக்கும்போதே பாண்டு இறந்து போனான். பெரிய தகப்பன் பாண்டவர்களை வளர்த்து கல்வி கற்பித்தான்.

பாண்டுவின் மக்கள் புத்திகூர்மை உடையவர்கள். ஜனங்கள் எல்லாரும் பாண்டவர்களையே நேசித்தார்கள். கௌரவர்கள் தீயவர்கள்; பொறாமைக் குணம் உடையவர்கள். கௌரவர்கள் பாண்டவர்களைக் கொல்லப் பல தரம் முயன்றார்கள். ஆனால் பாண்டவர்கள் தப்பித்துக்கொண்டனர்.

பாஞ்சால தேசத்தரசன் மகள் பாஞ்சாலியைப் பாண்டவர்கள் மணந்து கொண்டார்கள். மிகுந்த சீரும் செல்வமுமாக வாழ்ந்து வந்தனர்.

கௌரவர்கள் பாண்டவர்கள்மேல் மிகுந்த பொறாமை அடைந்தார்கள். அத் துஷ்டர்கள்

பாண்டவர்களை விருந்திற்கு அழைத்தனர். சூதாட்டம் ஆடினர். அதில் கௌரவர்கள் வென்றார்கள். பாண்டவர் தோல்வி அடைந்தனர். கௌரவர் பாண்டவர்களது செல்வங்களை யெல்லாம் பிடுங்கிக்கொண்டு அவர்களைக் காட்டுக்குத் துரத்திவிட்டார்கள்.

பிறகு பாண்டவர்கள் பொறுமையோடு இருந்தனர். சில ஆண்டுகள் கழிந்த பிறகு கண்ணனுடைய உதவியைக் கொண்டு கௌரவர்களோடு சண்டைசெய்து வெற்றி பெற்றார்கள். தமது நாட்டைப் பெற்றுச் சுகமாக வாழ்ந்து வந்தார்கள். கௌரவர்கள் யாவரும் ஒழிந்தார்கள்.

"பொறுத்தார் அரசாள்வார்"



# 25. செய்யுள் பாடம்



## I. உலகநீதி

1. ஓதாமல் ஒருநாளும்
இருக்க வேண்டாம்
2. ஒருவரையும் பொல்லாங்கு
சொல்ல வேண்டாம்
3. மாதாவை ஒருநாளும்
மறக்க வேண்டாம்
4. நல்லிணக்கம் இல்லாரோடு
இணங்க வேண்டாம்
5. அஞ்சாமல் தனிவழியே
போக வேண்டாம்
6. அடுத்தவரை ஒருநாளும்
கெடுக்க வேண்டாம்
7. தருமத்தை ஒருநாளும்
மறக்க வேண்டாம்.
8. கொலைகளவு செய்வாரோடு
இணங்க வேண்டாம்
9. கற்றவரை ஒருநாளும்
பழிக்க வேண்டாம்
10. கோயில்இல்லா ஊரில்குடி
இருக்க வேண்டாம்

**11.** எளியாரை எதிரிட்டுக்
கொள்ள வேண்டாம்

**12.** செய்தநன்றி ஒருநாளும்
மறக்க வேண்டாம்

**13.** காணாத வார்த்தையைக்கட்
டுரைக்க வேண்டாம்

**14.** புண்படவே வார்த்தைதனைச்
சொல்ல வேண்டாம்

**15.** திறம்பேசிக் கலகமிட்டுத்
திரிய வேண்டாம்

**16.** மூத்தோர்சொல் வார்த்தைதனை
மறக்க வேண்டாம்

**17.** முன்கோபக் காரரோடு
இணங்க வேண்டாம்

**18.** புறஞ்சொல்லித் திரிவாரோடு
இணங்க வேண்டாம்

**19.** இறந்தாலும் பொய்தன்னைச்
சொல்ல வேண்டாம்

**20.** தெய்வத்தை ஒருநாளும்
மறக்க வேண்டாம்.



## II. ஆத்திசூடி

1. அறஞ்செய விரும்பு
2. ஆறுவது சினம்
3. இயல்வது கரவேல்
4. ஈவது விலக்கேல்
5. ஊக்கமது கைவிடேல்
6. எண்ணெழுத்து இகழேல்
7. ஐயம் இட்டுண்
8. ஓதுவது ஒழியேல்
9. தந்தைதாய்ப் பேண்
10. நன்றி மறவேல்
11. இளமையில் கல்
12. செய்வன திருந்தச்செய்
13. தெய்வம் இகழேல்
14. நன்மை கடைப்பிடி
15. நீர் விளையாடேல்
16. நோய்க்கு இடங்கொடேல்
17. பெரியோரைத் துணைக்கொள்
18. மூர்க்கரோடு இணங்கேல்
19. மேன்மக்கள் சொற்கேள்
20. வித்தை விரும்பு
21. வைகறைத் துயில்எழு



Printed at the 'Caxton Press,' Madras — 1938. (C)

## ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

### பாட புத்தகங்கள்

#### உத்தம முறை வாசகம்

| | | | |
|---|---|---|---|
| முதற் புத்தகம் ... ... ... | 0 | 2 | 0 |
| இரண்டாம் புத்தகம் ... ... ... | 0 | 2 | 0 |

#### பால வாசகங்கள்

| | | | |
|---|---|---|---|
| முதல் வகுப்பு ... ... ... | 0 | 2 | 6 |
| இரண்டாம் வகுப்பு ... ... ... | 0 | 3 | 0 |
| மூன்றும் வகுப்பு ... ... ... | 0 | 3 | 6 |
| நான்காம் வகுப்பு ... ... ... | 0 | 4 | 6 |
| ஐந்தாம் வகுப்பு ... ... ... | 0 | 6 | 0 |

#### இராஜ மார்க்கத் தமிழ் வாசகங்கள்

| | | | |
|---|---|---|---|
| முதல் வகுப்பு ... ... ... | 0 | 2 | 6 |
| இரண்டாம் வகுப்பு ... ... ... | 0 | 3 | 0 |
| மூன்றும் வகுப்பு ... ... ... | 0 | 4 | 0 |
| நான்காம் வகுப்பு ... ... ... | 0 | 6 | 0 |
| ஐந்தாம் வகுப்பு ... ... ... | 0 | 7 | 0 |

#### இலக்கணங்கள்

(இளைஞர் இலக்கணம்)

| | | | |
|---|---|---|---|
| முதற் புத்தகம் ... ... ... | 0 | 3 | 0 |
| இரண்டாம் புத்தகம் ... ... ... | 0 | 5 | 0 |
| மூன்றும் புத்தகம் ... ... ... | 0 | 6 | 0 |
| நான்காம் புத்தகம் ... ... ... | 0 | 8 | 0 |

Caxton Press Madras.